23rd September 1961]

*Radio sets—Manufacture of*

* 1788 Q.—Sri V. K. KOTHANDARAMAN : கனம் உள்துறை அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) கோவையில் ஜி.டி. நாயுடு ரேடியோக்களை தயார் செய்கிறாரா ?

(இ) அவருக்கு நமது (1) ராஜ்ய சர்க்கார், (2) மத்திய சர்க்கார் அளிக்கும் உதவி என்ன ?

(உ) 1957 முதல் இது வரை எத்தனை ரேடியோக்கள் உற்பத்தி செய்யப்பட்டன ?

(எ) அவைகளின் தரம் என்ன ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : (அ) A firm named U.M.S. Radio Factory in Coimbatore in which Sri G. D. Naidu is reported to be a technical adviser is manufacturing radios.

(இ) (1) Government of Madras sanctioned a loan of Rs. 1 lakh to this firm under the State Aid to Industries Act in 1957.

(2) No information is available regarding assistance given to the concern by the Central Government.

(உ) About 12,697 radio sets were manufactured by this firm from 1957 to March 1961.

(எ) This Government cannot express opinion.

Sri V. K. KOTHANDARAMAN : இந்த ரேடியோக்கள் நல்ல தரமுள்ளதாகவும், குறைந்த விலையிலே இருப்பதாகவும் சொல்லப் படுகிறது. அப்படியிருக்கும்பொழுது நமது சர்க்கார் துறையிலே எங்கெங்கே வேண்டுமோ அதற்காக வாங்கக்கூடிய ரேடியாக்கள் மற்றக் கம்பெனி களிலிருந்து தானே வாங்கப்படுகிறது. இந்தக் கம்பெனியிலிருந்து ஏன் வாங்கப்படுவதில்லை ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : எவ்வளவு உற்பத்தி யாகிறதோ அது விற்கப்பட்டுத்தான் வருகிறது.

Sri K. VINAYAKAM : Are the Government aware of the fact that in season and out of season this gentleman is making complaints that in spite of the low cost of his radio sets and in spite of the higher efficiency of those sets when compared to the sets now purchased by the Government for their rural centres, the Government were not going in for his sets? Will the Government examine these factors and if there is any grain of truth in his statement, will the Government switch over to the policy of purchasing those indigenous manufactured sets?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : Sir, I am not aware of all those things stated by the hon. Member.

Sri P. M. MUNUSWAMY GOUNDER : இங்கே தயாரிக்கும் ரேடியோக்களின் உயர்ந்த விலை என்ன, குறைந்த விலை என்ன என்று சர்க்காருக்குத் தெரியுமா ?

Sri M. BHAKTAVATSALAM : என்னிடம் அந்தத் தகவல் இல்லை.

Sri. K. ANBAZHAGAN : கனம் தலைவர் அவர்களே, இந்த யு.எம்.எஸ். வானொலிப்பெட்டிகள் சிறந்த முறையிலே தயாரிக்கப்படுகின்றன என்று சொல்லப்படுகிறது. ஆனாலும், அதிக அளவிலே தயாரிப்பதற்கு

அதற்கு வேண்டிய துணைப்பொருள்கள் வெளி நாடுகளிலிருந்து கிடைக்க வேண்டியது கிடைக்காததால், துணைப் பொருள்கள் கிடைப்பதற்கு அரசாங்கம் ஆவன செய்யுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதை உற்பத்தி செய்கிறவர்கள் இந்த அரசாங்கத்தின் உதவியைக் கோரினால், இயன்ற அளவில் ஆதரவெல்லாம் அதற்கு அளிக்கப்படும்.

*Dhrangadra Chemical Works—State aid to*

* 1789 Q.—SRI. V. K. KOTHANDARAMAN : கனம் உள்துறை அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

திருநெல்வேலி ஜில்லாவில் நடைபெறும் தரங்கத்ரா ரசாயன தொழிற்சாலைக்கு ராஜ்ய சர்க்கார்களின் உதவி ஏதாவது கொடுக்கப்பட்டுள்ளதா ? அப்படியானால் எவ்வளவு ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The Government of Madras have taken shares to the value of Rs. 10 lakhs in the Dhrangdhra Chemical Works, Limited, which has set up a caustic soda factory in Tirunelveli district.

SRI V. K. KOTHANDARAMAN : ஸார் இந்தத் தொழிற்சாலையில் எல்லாம் வட இந்தியர்களைக் கொண்டே நடத்தப்படுகிறது, தென்னிந்தியர்களே இல்லை என்ற அதிருப்தி இருக்கிறது. அங்கு சென்ற காங்கிரஸ் எம். எல். ஏக்கள் எல்லோரிடத்திலும் சொன்னார்கள். அது அமைச்சருக்குத் தெரியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : எனக்கு ஒன்று தெரியும். தென்னிந்தியர்கள் ஒருவர்கூட இல்லை என்பது உண்மையில்லை என்று.

SRI K. ANBAZHAGAN : கனம் தலைவர் அவர்களே, தனிப்பட்ட முதலாளி நடத்தும் இந்தத் தொழிற்சாலைக்கு 10 லட்ச ரூபாய் வரை மூலதனம் சர்க்கார் கொடுக்கக் காரணம் என்ன, எந்த அடிப்படையில் உதவி செய்யப்பட்டிருக்கிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இது ஒரு முக்கியமான தொழில். தூத்துக்குடி பக்கத்தில் மூலப் பொருள் கிடைக்கிறது. அதைப் பயன்படுத்தி இதை உற்பத்தி செய்ய வேண்டும். அப்பொழுது நான் தொழில் இலாகா பொறுப்பு வகித்து வந்தேன். தமிழ் நாடு பூராவிலும் தொழில் அதிபர்களுக்குக் கடிதம் எழுதி, இந்தத் தொழிலை யாராவது எடுத்து நடத்துவார்களா என்று கேட்டேன். எல்லோரும் எங்களால் முடியாது என்று சொன்னார்கள். அப்படிப்பட்ட நிலையில் ஒருவர் வருகிறார் என்றால், அதற்கு பூரா மூலதனமும் போடமுடியவில்லை. இதை விஸ்தரிப்பதால், தமிழ் நாட்டின் பொருளாதார நிலை உயரும். இம்மாதிரி இருக்கும் தொழிலில் முதல் போடுவது என்பது அரசாங்கத்தின் கொள்கை; நோக்கமும் ஆகும்.

SRI M. KALYANASUNDARAM : ஸார், உற்பத்தி தொடங்கி ஒரு வருஷம் ஆகிவிட்டதே. அது லாபகரமாக நடக்கிறதா, சர்க்கார் பங்குத் தொகைக்கு லாபம் எவ்வளவு ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதைப் பற்றித் தனிக்கேள்வி போட்டால் பதில் சொல்லுகிறேன்.

*Jaggery—Export of*

* 1790 Q. SRI V. K. KOTHANDARAMAN : கனம் உள்துறை அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) நமது ராஜ்யத்திலிருந்து வெல்லம் ஏற்றுமதியை நிறுத்தி வைக்கப்பட்டுள்ளது உண்மையா ?